**Sri K. PERIANNAN :** இதற்கு அரசாங்கத்திலிருந்து எவ்வளவு செலவு செய்யப்பட்டிருக்கிறது என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** செலவு எவ்வளவு ஆயிற்று என்பதற்கு இப்போது தகவல் இல்லை. இப்போது அந்த மெஷின் வேலை செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

**Sri K. PONNIAN :** இந்தமாதிரி சலவை இயந்திரம் ஒவ்வொரு ஜில்லா தலைநகர ஆஸ்பத்திரியிலும் வைக்கப்படுமா என்று அறியவிரும்பு கிறேன்.

**Mr. SPEAKER :** நீங்கள் தனிக் கேள்வி போடுங்கள். இது திருச்சிராப்பள்ளியைப் பற்றியதுதான்.

* 427 *Q.*—Sri S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to increase the number of beds in the Headquarters Hospital at Tiruchirappalli?

The Hon. Sri M. A. MANICKAVELU : No, Sir.

**Sri S. LAZAR :** இப்போது இருக்கக்கூடிய பெட் எண்ணிக்கை என்ன ? அதை அதிகரிக்கவேண்டும் என்பதாக அதிகாரிகளிடமிருந்து ஏதாவது கோரிக்கைகள் வந்திருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** பெட் எண்ணிக்கை போன வருஷம்தான் 275-ல் இருந்து 360 ஆக அங்கே உயர்த்தப்பட்டிருக்கிறது. இன்னும் அநேக ஆஸ்பத்திரிகளில் இந்த அளவுக்குக் கூட அதிகப்படுத்தப் படவில்லை. ஆகவே இது விஷயம் அவ்வப்போது கவனிக்கப்பட்டு வருகிறது.

**Sri S. LAZAR :** இருக்கக்கூடிய பெட் எண்ணிக்கைக்கு மூன்று மடங்கு அதிகமாக அனுமதிக்கப்படுகிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? ஆகவே இதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** மூன்று மடங்கு என்று சொல்வதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. 1½ மடங்கு, 2 மடங்கு இருக்கலாம்.

*Teachers*

* 428 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the teachers who have passed secondary grade examination by appearing privately have been given secondary grade pay?

The Hon. Sri C. SUBRAMANIAM : Teachers who have passed secondary grade examination by appearing privately are eligible for secondary grade pay if they are appointed in aided schools. They are eligible for secondary grade pay under other managements only if they are employed in sanctioned secondary grade posts.

*Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act*, 1948

* 429 *Q.*—Sri A. R. MARIMUTHU : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை எஸ்டேட்டுகளை (ஒழிப்பதையும் ரயத்துவாரியாக மாற்று வதையும்) பற்றிய 1948-ம் வருஷத்திய சட்டப்படி அரசாங்கத்தாரால் இது வரையில் எடுத்துக்கொள்ளப்பட்ட கிராமங்களில் செட்டில்மெண்ட் விசாரணை முடிந்த கிரமங்கள் எத்தனை ?

(ஆ) பாக்கி கிராமங்கள் எத்தனை ?

27th March 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Number of estates taken over under the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act :—

Zamin estates—1,015.

Undertenure estates—931.

Inam estates—2,782.

(*b*) Number of estates in which ryotwari settlement has been introduced or is proposed to be introduced in the current fasli :—

| — | Fasli 1365. | Fasli 1366. | Fasli 1367. |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| **Zamin estates** .. .. | .. | **28** | **120** |
| **Undertenure estates** .. | 9 | **44** | **316** |
| **Inam estates** .. .. | — | **128** | **507** |

SRI A. R. MARIMUTHU : இந்தச் சட்டத்தை அமுலாக்குவதில் நீண்ட கால தாமதம் ஆவதனுல் கிராமங்களிலுள்ள விவசாயிகளுக்கு மிகுந்த கஷ்டம் ஏற்படுவதால் உடனடியாக செட்டில்மெண்டு முடிப்பதற்கு என்ன நடவடிக்கை எடுப்பார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அதற்கு சர்வே போர்டு நியமித்து கூடுமானவரையில் எவ்வளவு வேகமாகச் செய்யமுடியுமோ அவ்வளவு வேகமாகச் செய்கிருேம்.

SRI S. LAZAR : இது 1948-ல் நிறைவேற்றப்பட்ட சட்டம், ஒவ்வொரு ஆண்டும் ஒரு செட்டில்மெண்டுதான் எடுக்கப்படுகிறது. அந்த அந்த ஆண்டிலேயே செட்டில்மெண்டு முடிவாக ஏற்பாடு செய்யமுடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அநேகமாக எல்லா எஸ்டேட்டுகளும் எடுக்கப்பட்டாய்விட்டன. ஒன்றிரண்டு கோர்ட்டில் விவகாரம் இருக்கலாம், சர்வே பார்ட்டி ஏற்படுத்தியிருக்கிருேம். கூடிய சீக்கிரம் முடிந்துவிடும்.

SRI T. SAMPATH : Have the Government any proposal to abolish the estates coming under the 1936 Amendment Act?

THE HON. SRI M. A. MANICKAVELU : The question relates to the estates taken over. The hon. Member's question relates to the ones to be taken over. That is under consideration.

SRI S. NAGARAJA MONIGAR : இந்த மாநிலத்தில் ஜமீன், இனமாக இருப்பதை ரயத்துகளாக மாற்றப்படுவதால் சிக்கல் ஏற்படு மாதலால் சிறிது காலதாமதம் அவசியம் ஏற்படும்போது அதை முன் போலவே வைக்க சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எதற்காக அப்படிச் செய்ய வேண்டும் என்பதற்குத் தக்க காரணம் சென்னுல் அப்போது அது பரிசீலிக்கப்படும்.